உ
சிவமயம்

# அகத்திய மூலம்
# திருமந்திரம்

*

மு. திருவி

*

வெளியீடு:

திருவி சக்கரம்
பன்னாலை :: தெல்லிப்பழை

1970

வன்னிமர விருட்ச நிழலில் வீற்றிருக்கும்
விகட சக்கரப் பிள்ளையார் துணை



சுவேதாரணியேஸ்வரன்
அநுக்கிரகம் வேண்டும்



முத்துக்குமாரசுவாமியின்
அநுக்கிரகம் வேண்டும்

தெல்லி பன்னலைத் திரிசிச் சரமுடையான்
செல்வ மலிதேவர் சிறைமீட்ட — தொல்புகழான்
வள்ளி மலைக்கந்தர் வனச மலர்ப்பதங்கள்
உள்ளத்து வைப்பாம் உவந்து.

(ரெலிபதி — Telepathy)
(P. M. G. High Priest)

விலை : ரூபா 10-00

தகராறு வீதி

உ
சிவமயம்

# அகத்திய மூலம்

## தெரித்த மந்திரம்

சங்கராபரணம்

குருசந்நிதானம்


மு. திருஷி

திருஷி ஈச்சுரம், யாழ்ப்பாணம்.


தெல்லிப்பழை, பன்னாலை கு. மு. குருக்கள் வேண்டுகோளுக்கிணங்க, சாவகச்சேரி மு. சீதாலக்ஷ்மி மேற்பார்த்து ஏட்டில் இருந்து எழுதியது. துதிக்கைலாச மடத் தரங்கேறியது.


1970


வன்மீகர்


சுன்னாகம், திருமகள் அழுத்தகத்தில் குரும்பசிட்டி, திரு. முத்தையா சபாரத்தினம் அவர்களால் அச்சிடப்பட்டு, பன்னாலை, ஸ்ரீமதி அ. சீதாலக்ஷ்மி அவர்களால் வெளியிடப்பட்டது. — உ497-1/70



ரத்தாக்ஷி வருஷம் (1924ஆம் ஆண்டு) சித்திரை மாதம் 30ஆம் திகதி புதன்கிழமை தேவர்களால் பூஜிக்கப்பட்ட இம் மஹா சிவலிங்கம் இந்தியாவில் திருப்பாப்புலியூரில் இருந்து மு. திருஷி அவர்களால் கொண்டுவந்து ஸ்தாபிக்கப்பெற்றது. பூலோகத்திலுள்ள எல்லாச் சீவராசிகளுக்கும் நல்லருள் புரிவார்.

# அகத்திய மூலம்

## திருமந்திரம்

### சொற்றிறம்பாமை

அண்டஞ் சுருங்கி லதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராண னிலைபெறும்
உண்டி சுருங்கி லுபாயம் பலவுள 1
கண்டங் கறுத்த கபாலியு மாமே.

நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுக்கின்ற தெம்பெரு மானென்ன வீச
னடுவுள வங்கி யகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றனே. 2

அங்கி யுதயம் வளர்க்கு மகத்திய
னங்கி யுதயஞ்செய் மேல்பா லவனொடு
மங்கி யுதயஞ்செய் வடபாற் றவமுனி
யெங்கும் வளங்கொள் விளங்கொளி தானே. 3

### பதி வலியில் வீரட்ட மெட்டு

கருத்துறை யந்தகன் றன்போ லசுரன்
வரத்தி னுலகத் துயிர்களை யெல்லாம்
வருத்தஞ் செய்தானென்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றனே. 4

கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேணுமென் றெண்ணித்
தலையைப் பரிந்திட்டுச் சந்திசெய் தானே. 5

எங்கும் பரந்து மிகுநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் ருளுணர் தேவர்கள்
பொங்கு சினத்து ளயன்றலை முன்னுற
வங்கச் சுதனை யுதிரங்கொண் டானே. 6

எங்குங் கலந்துமென் னுள்ளத் தெழுகின்ற
வங்க முதல்வ னருமறை யோகிபாற்
பொங்குஞ் சலந்தரன் போர்செல்ல நீர்மையி
னங்கு விரற்குறித் தாழிசெய் தானே. 7

அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கண் மூடர்கண்
முப்புர மாவது மும்மல தாரிய
மப்புர மெய்தமை யாரறி வாரே. 8

முத்திக் கொளுவி முழங்கெரி வேள்வியு
ளத்தி யுரியர னுவ தறிகிலர்
கத்திக் கருதிய தாம்பல தேவரு
மத்தீயி னுள்ளெழுந் தன்று கொலையே. 9

மூலத் துவாரத்து மூளு மொருவனை
மேலைத் துவாரத்தின் மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமா யிருந்ததே. 10

இருந்த மனத்தை யிசைய விருத்திப்
பொருந்திய லிங்க வெளியது போக்கித்
திருந்திய காமன் செயலழி யத்தங்
கருந்தவ யோகங் கொறுக்கை யமர்ந்ததே. 11

## இலிங்கப் புராணம்

அடிசேர்வ னென்னவெம் மாதியை நோக்கி
முடிசேர் மலைமக னார்மக ளாகித்
திடமா தவஞ்செய்து தேவ ரறியப்
படியார வர்ச்சித்துப் பத்திசெய் தானே. 12



திரிகின்ற முப்புரஞ் சென்ற பிரானை
யரியனென் றெண்ணி யயர்வுற வேண்டாம்
பரிவுடை யாளர்க்குப் பொய்யல னீசன்
பரிவொடு நின்று பரிசறி வானே. 13

ஆழி வலங்கொண் டயன்மா லிருவரும்
மூழி வலஞ்செய்ய வொண்சுட ராதியு
மாழி கொடுத்தன னச்சுதற் கவ்வழி
வாழிப் பிரமற்கும் வாள்கொடுத் தானே. 14

தாங்கிய விருபது தோளுந் தடவரை
யோங்க வெடுத்தவ னொப்பில் பெருவலி
யாங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்
னீங்கா வருள்செய்தா னின்மலன் றானே. 15

உறுவ தறிதண்டி யொண்மணற் கூட்டி
யறுவகையா னைந்து மாட்டத்தன் றாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழுவால் வெட்டி மாலைபெற் றானே. 16

ஓடிவந் தெல்லா மொருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி யிறைவர் நமவென்று கும்பிட
வேடில் புகழோ னெழுகவென் றானே. 17

## தக்கன் வேள்வி

தந்தை பிரான்வெகுண் டான்றக்கன் வேள்வியை
வெந்தழ லூடே புறப்பட்ட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தின ரண்ணல் சினஞ்செய்த போதே. 18

சந்திசெய் கண்டெழு கின்றரி தானு
மெந்தை யிவனல்ல யாமே யுலகினிற்
பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய
வந்தமி லானு மருள்புரிந் தானே. 19

அப்பரி சேயய ஞர்பதி வேள்வியு
ளப்பரி சங்கி யதிசய மாகிலு
மப்பரி சேயது நீர்மையை யுள்கலந்
தப்பரி சேசிவ ஞலிக்கின் ருனே. 20

அப்பரி சேயயன் மால்முதற் றேவர்க
ளப்பரி சேயவ ராகிய காரண
மப்பரி சங்கியு நாளுமுன் னிட்ட
வப்பரி சாகிய லந்திருந் தானே. 21

அலந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
யுவந்த பெருவழி யோடிவந் தானே. 22

அரிபிர மன்றக்க னருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் லிந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தா
னரனரு ளின்றி யழிந்தநல் லோரே. 23

செவிமந் திரஞ்சொல்லச் செய்தவத் தேவர்
விதிமந் திரத்தி னடுக்களைக் கோலிற்
செவிமந் திரஞ்செய்து தாமுற நோக்குங்
குவிமந் திரங்கொல் கொடியது வாமே. 24

நல்லார் நவகுண்ட மொன்பது மின்புறப்
பல்லா ரமரர் பரிந்தருள் செய்கென
வில்லால் வரையை விளங்கொளி கொற்றவன்
பொல்லா வசுரர்கள் பொன்றும் படிக்கே. 25

தெளிந்தார் கலங்கினு நீகலங் காதே
யளிந்தாங் கடைவதெம் மாதிப் பிரானை
விளிந்தா னத்தக்கனவ் வேள்வியை வீயச்
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யானே. 26



## பிரளயம்

கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல விறைவ
னொருவனு நீருற வோங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே. 27

அலைகட லூடறுத் தண்டத்து வானோர்
தலைவ னெனும்பெயர் தான்றலை மேற்கொண்
டுலகா ரழற்கண் டுள்வீழா தோடி
யலைவாயில் வீழாம லஞ்சலென் றானே. 28

தண்கடல் விட்ட தமரருந் தேவரு
மெண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர்
விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்
கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே. 29

சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி
யமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி யோசை
மிகைக்கொள வங்கிமி காமைவைத் தானே. 30

பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாகம லத்திருக் கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாதுவி ருத்திக்கொண் டானே. 31

## சக்கரப் பேறு

மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங்
கால்போதங் கையினோ டந்தரச் சக்கர
மேல்போக வெள்ளி மலையம ராபதிப்
பார்போக மேழும் படைத்துடை யானே 32

சக்கரம் பெற்றுநற் றூமோதரன் றானுஞ்
சக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணாமையால்
மிக்கரன் றன்னை விருப்புட னர்ச்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. 33

கூறது வாகக் குறித்துநற் சக்கரங்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து தரித்தனன் கோலமே. 34

தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பாற்
றக்கன்றன் வேள்வியிற் றூமோதரன் றானுஞ்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
வக்கியு மிழ்ந்தது வாயுக் கரத்திலே. 35

## எலும்புங் கபாலமும்

எலும்புங் கபாலமு மேந்தி யெழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
யெலும்புங் கபாலமு மேந்தில னாகி
லெலும்புங் கபாலமு மிற்றுமண் ணாமே. 36

## அடிமுடி தேடல்

பிரமனு மாலும் பிரானேநா னென்னப்
பிரமன்மா றங்கடம் பேதமை யாலே
பரம னனலாய்ப் பரந்துமுன் னிற்க
வரனடி தேடி யரற்றுகின் றாரே. 37

ஆமே முலகுற நின்றவெம் மண்ணலுந்
தாமே முலகிற் றழற்பிழம் பாய்நிற்கும்
வானே முலகுறு மாமணிக் கண்டனை
நானே யறிந்தே னவனுண்மையி னாலே. 38



ஊனு யுயிரா யுணர்வங்கி யாய்முன்னந்
சேணு வரனேங்குந் திருவுரு வேயண்டத்
தாணுவு ஞாயிறுந் தண்மதி யுங்கடந்
தாண்முழுந் தண்டமு மாகிநின் றானே. 39

நின்றா னிலமுழு தண்டத்து ணீளிய
னன்றே யவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றா ரிருவர் திருமுடி மேற்செல
நன்றாங் கழலடி நாடவொண் ணாதே. 40

சேவடி யேத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றானு முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனுந்
தாவடி யிட்டுத் தலைப்பெய்தும் வாறே. 41

கானக் கமலத் திருந்து சதுமுகன்
றானக் கருங்கட லூழித் தலைவனு
மூனத்தி னுள்ளே யுயிர்போ லுணர்கின்ற
தானப் பெரும்பொருட் டன்மைய தாமே. 42

ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்
பாலிங் ஙனஞ்செய் துலகம் வலம்வருங்
கோலிங்க னமஞ்சருள் கூடலு மாமே. 43

வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்க
ளாள்கொடுத் தெம்போ லரனை யறிகில
ராள்கொடுத் தின்பங் கொடுத்துக்கோ ளாகத்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே. 44

ஊழி வலஞ்செய்தங் கோரு மொருவற்கு
வாழிச் சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்தது தாவென
வூழிக் கதிரோ னொளியைவென் றானே. 45

## சர்வ சிருஷ்டி

ஆதியொ டந்த மிலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதிய தனிற்பரந் தோன்றத் தோன்றுமாந்
தீதில்ப ரையதன் பாற்றிகழ் நாதமே. 46

நாதத்தில் விந்துவு நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி யென்னவே
பேதித்து ஞானங் கிரியைபி றத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே. 47

இல்லது சத்தி யிடந்தனிலுண் டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும்
வல்லது வாக வழிசெய்த வப்பொருள்
சொல்லது சொல்லிடிற் றூராதி தூரமே. 48

தூரத்திற் சோதி துடர்ந்தொரு சத்தியா
யார்வத்து நாத மனைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முத லைந்துக்கு
மார்வத்துச் சத்தியோ ராவத்து மானுமே. 49

மானின்கண் வானாகி வாரி வளந்தனிற்
கானின்க ணீருங் கலந்து கடினமாய்த்
தேனின்க ணைந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்க ணின்று பொருந்தும் புவனமே. 50

புவனம் படைப்பா னொருவ னொருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திர ரைவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்
புவனம் படைப்பானப் புண்ணியன் றானே. 51

புண்ணிய னந்தி பொருந்து முலகெங்கு
மண்ணியல் பாகி வளர்ந்திடுஞ் சத்தியுந்
தண்ணியல் பாகித் தரணி முழுதுமாய்
கண்ணியல் பாகிக் கலந்தெழும் பூவிலே. 52



நீரகத் தின்பம் பிறக்கு நெருப்பிடை
காயத்திற் சோதி பிறக்குமக் காற்றிடை
யோர்வுடை நல்லுயிர்ப் பாத மொலிசத்தி
நீரிடை மண்ணி னிலைபிறப் பாமே. 53

உண்டுல கேழு முமிழ்ந்தா னுடனாகி
யண்டத் தமரர் தலைவனு மாதியுங்
கண்டச் சதுமுகக் காரணன் றன்னொடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. 54

ஓங்கு பெருங்கட லுள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் றானும்
வீங்குங் கமல மலர்மிசை மேலய
னாங்குயிர் வைக்கு மதுவுணர்ந் தானே. 55

காரண னன்பிற் கலந்தெங்கு நின்றவன்
நாரண னின்ற நடுவுட லாய்நிற்கும்
பாரண னன்பிற் பதஞ்செய்யு நான்முக
னாரண மாயுல காயமர்ந் தானே. 56

பயனெளி தாம்பரு மாமணி செய்ய
நயனெளி தாகிய நம்பனென் றுண்டு
வயனெளி யாயிருந் தங்கே படைக்கும்
பயனெளி தாம்வய ணந்தெளிந் தேனே. 57

போக்கும் வரவும் புனித னருள்புரிந்
தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து
மேக்கு மிகநின்ற வெட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் றானே. 58

நின்றுயி ராக்குநீ மலனென் னுருயி
ரொன்றுயி ராக்கு மளவை யுடலுற
மூன்றுயி ராக்கு முடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. 59

ஆடுகின்ற தன்மையி லக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துட லாயுள
ஞகின்ற தன்மைசெய் யாண்டகை யானே. 60

ஒருவ ஞெருத்தி விளையாட லுற்று
ரிருவர் விளையாட்டு மெல்லாம் விளக்கும்
பருவங்க டோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. 61

புகுந்தறி வான்புவ ஞபதி யண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முழக் காகிநின் ருரே. 62

ஆணவச் சத்தியு மாமதி லவரும்
காரிய காரண வீசர் கடைமுறை
பேணிய வைந்தொழி லால்விந்து விற்பிறந்
தாணவ நீங்கா தவரென லாகுமே. 63

உற்றமுப் பாலொன் றுமையா ளுதயமா
மற்றைய மூன்று மாயோ தயம்விந்து
பெற்றவ ணுதம் பரையிற் பிறத்நலாற்
றுற்ற பரசிவன் ருெல்விளை யாட்டிதே. 64

ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய வீச னரன்மால் பிரமஞ
மாகாயம் பூமியுங் கான வளித்தலே. 65

அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னி
லளியார் திரிபுரை யாமவ டானே
யளியார் சதாசிவ மாகிய மைவா
னளியார் கருமங்க ளந்துசெய் வானே. 66



வாரணி கொங்கை மனோன்மணி மங்கிலி
காரண காரிய மாகக் கலந்தவள்
வாரணி யாரணி யானவம் மோகினி
பூரணி போதாதி போதமு மாமே. 67

நின்றது தானய் நிறைந்தம கேசுரன்
சென்றங் கியங்கி யரன்றிரு மாலவன்
மன்றது செய்யு மலர்மிசை மேலய
னென்றிவ ராக விசைந்திருந் தானே. 68

ஒருவனு மேயுல கேழும் படைத்தா
னொருவனு மேயுல கேழு மளந்தா
னொருவனு மேயுல கேழுங் கடந்தா
னொருவனு மேயுட லோடுயிர் தானே. 69

செந்தாம ரைவண்ணன் தீவண்ண னெம்மிறை
மஞ்சார்மு கில்வண்ணன் மாயஞ்செய் பாசத்துக்
கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்து
மைந்தார் பிறவி யமைத்துநின் ருனே. 70

தேடுந் திசையெட்டுஞ் சீவ னுடலுயிர்
கூடும் பிறவிக்கு ணஞ்செய்த மாநந்தி
யூடும வர்தம துள்ளத்தி னுண்ணின்று
நாடும் வழக்கமு நானறிந் தேனே. 71

ஓராய மேவுல கேழும் படைத்தது
வோராய மேயுல கேழு நடப்பது
யோராய மேயுல கேழு மிறப்பது
வோராய மேயுட லோடுயிர் தானே. 72

நாத னொருவனு நல்ல விருவருங்
கோதுகு லத்தொடு கூட்டிக் குழைத்தன
ரேது பணியென் றிசையு மிருவருக்
காதி யிவனே யருளுகின் ருனே. 73

அப்பரி செண்பத்து நான்குநூ றுயிர
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கு
மப்பரி சேதென்று புகலும வினிதர்க 74
ளப்பரி சேயிருண் மூடநின் றாரே.

ஆதித்தன் சந்திர னங்கி யெனப்பலர்
போதித்த வானொலி பொங்கெரி நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிக 75
ளோதுற்ற மாயையின் விந்துவி னுற்றதே.

## திதி

புகுந்துநின் றுன்வெளி யாயிரு ளாகிப்
புகுந்துநின் றுன்புகழ் வாயிகழ் வாகிப்
புகுந்துநின் றானுட லாயுயி ராகிப் 76
புகுந்துநின் றுன்புந்தி பன்னிநின் றுனே.

தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந் 77
தானே யுலகிற் றலைவனு மாமே.

யுடலா யுயிரா யுலகம தாகிக்
கடலாய்க் கார்முகி னீர்பொழி வானு
யிடையா யுலப்பிலி யெங்குந்தா னுதி 78
யடையார் பெருவிழி யண்ணநின் றுனே.

தேடுந் திசையெட்டுஞ் சீவனு டலுயிர்
கூடு மரபிற் குணஞ்செய்து மாநந்தி
யூடு மவர்தம துள்ளத்து ளேநின்று 79
நாடும் வழக்கமு நானறிந் தேனே.

தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்குந்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்குந்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்குந் 80
தானொரு காலந் தண்மாய னுமாமே.



அன்பு மறிவு மடக்கமு மாய்நிற்கு
மின்பமு மின்பக் கலவியு மாய்நிற்கு
முன்புறு காலமு மூழியு மாய்நிற்கு
மன்புற வைந்தின மர்ந்துநின் றுனே. 81

உற்றுவ னைவா னவனே யுலகினைப்
பெற்றுவ னைவா னவனே பிறவியைச்
சுற்றிய சாலுங் குடமுஞ் சிறிதூதை
மற்று மவனே வனையவல் லானே. 82

உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றுர்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியா னிலங்கொளி
யுள்ளுயிர்க் குமுணர் வேயுட லுட்பரந்
தள்ளுயி ரவண்ணந் தாங்கிநின் றுனே. 83

தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை
யோங்கி யெழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கிநின் றுனுமத் தாரணி தானே. 84

அணுகினுஞ் சேபவ னங்கியிற் கூடி
நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணியினும் பார்மிசைப் பல்லுயி ராகித்
தணியினு மன்னுட லண்ணல்செய் வானே. 85

## சங்காரம்

அங்கிசெய் தீச னகலிடஞ் சுட்டது
வங்கிசெய் தீச னலைகடற் சுட்டது
வங்கிசெய் தீச னசுரரைச் சுட்டது
வங்கியவ் வீசற்குக் கையம்பு தானே. 86

இலயங்கண் மூன்றினு மொன்றுகற் பாந்த
நிலையன் றிழிந்தமை நின்றுணர்ந் தேனே
னுலைதந்த மெல்லரி போலு முலக
மலைதந்த மானிலந் தான்வெந் ததுவே. 87

பதஞ்செய்யும் பாரும் பனிவரை யெட்டு
முதஞ்செய்யு மேழ்கட லோத முதலாங்
குதஞ்செய்யு மங்கி கொளுவியா காசம்
விதஞ்செய்யு நெஞ்சின் வியப்பில்லை தானே. 88

கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
வண்டத்து ளூழியிருந் தெண்டிசை யாதி
யொன்றின் பதஞ்செய்த வோமென் றவப்புறக்
குண்டத்தின் மேலங்கி கோலிக்கொண் டானே.

நித்த சங்கார முறக்கத்து நீண்முடம்
வைத்த சங்காரமுஞ் சாக்கிரா தீதமாஞ்
சுத்த சங்காரந் தொழிலற்ற கேவல
முய்த்த சங்காரம் பரனரு ளுண்மையே. 90

நித்த சங்கார மிரண்டுட னீவுதல்
வைத்த சங்காரமு மாயாள்சங் காரமாஞ்
சுத்த சங்கார மனுதீதந் தோய்வித்த
லுய்த்த சங்காரஞ் சிவனரு ளுண்மையே. 91

நித்த சங்காரங் கருவிடர் நீக்கினு
லொத்த சங்கார முடலுயிர் நீவுதல்
வைத்த சங்காரங் கேவல மான்மாவுக்
குய்த்த சங்காரஞ் சிவமாகு முண்மையே. 92

நித்த சங்காரமு நீடிளைப் பாற்றுதல்
வைத்த சங்காரமு மன்னு மனுதியிற்
சுத்த சங்காரமுந் தோயாப் பரனருள்
வைத்த சங்காரமு நாலா மதிக்கிலே. 93

பாழே முதலா வெழும்பயி ரவ்விடம்
பாழே யடங்கினும் பண்டைப்பா ழாகாவாம்
வாழாச் சங்காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிரா யடங்குமப் பாழிலே. 94



தீயவைத் தார்மின்கள் சேரும்வி னைதனை
மாயம்வைத் தான்வைத் தவன்பதி யொன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்குநி னைப்பதோ
ராயம்வைத் தாயுணர் வாரவைத் தானே. 95

## திரோபாவம்

உள்ளத் தொருவனை யுள்ளுறு சோதியை
யுள்ளம்விட் டோரடி நீங்கா வொருவனை
யுள்ளமுந் தானு முடனே யிருக்கினு
முள்ள மவனை யுருவறி யாதே. 96

இன்பப் பிறவி படைத்த விறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயரு ளடைந்தன
னென்பிற் கொளுவி யிசைந்துறு தோற்றசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாக்குமே. 97

இறையவன் மாதவ னின்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன் சேர
விறையவன் செய்தவி ரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த பரிசறி யாரே. 98

காண்கின்ற கண்ணொளி காதற்செய் யீசனை
யாண்பெண் ணலியுரு வாய்நின்ற வாதியைப்
பூண்படு நாவுடை நெஞ்ச முணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே. 99

தெருளு முலகிற்குந் தேவர்க்கு மின்ப
மருளும் வகைசெய்யு மாதிப் பிரானுஞ்
சுருளுஞ் சுடருறு தூவெஞ் சுடரு
மிருளு மறநின் றிருட்டறை யாமே. 100

அரைக்கின் றருடரு மங்கங்க ளோசை
யுரைக்கின் றவாசையுமொன் றேடொன் றெவ்வாப்
பரக்கு முருவமும் பாரகந் தானுய்க்
கரக்கின் றவைசெய்த காண்டகை யானே. 101

ஒளித்துவைத் தென்னுள் ளுறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடு மீண்டே
களிப்பொடுங் காதன்மை யென்னும் பெருமை
வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே. 102

நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கு மயன்றிரு மாலவ
னன்றது செய்யு மலர்மிசை மேலய
னென்றிவ ராகி யிசைந்திருந் தானே. 103

ஒருங்கிய பாசத்து ளுத்தம சித்த
னிருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை யோரா வகையினிற் கங்கை
யருங்கரை பேணு தழுக்கது வாமே. 104

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடு
முண்ணின்ற யோனிக ளெல்லா மொருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனக்காணு
வண்ணனு மவ்வண்ண மாகிநின் றானே. 105

அநுக்கிரகம்

எட்டுத் திசையு மடிக்கின்ற காற்றவன்
வட்டத் திரையனல் மாநில மாகாச
மொட்டி யுயிர்நிலை யென்னுமிக் காயப்பை
கட்டி யவிழ்க்கின்ற கண்ணுதல் காணுமே. 106

உச்சியி லோங்கி யொளிதிகழ் நாதத்தை
நச்சியே யின்பங்கொள் வார்க்கு நமனில்லை
விச்சும் விரிசுடர் மூன்று முலகுக்குந்
தைச்சு மவனே சமைக்கவல் லானே. 107

குசவன் றிரிகையி லேற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போலெங்கள் கோனந்தி வேண்டி
லசையி லுலக மதுவிது வாமே. 108



விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேயுல காக்குங்
கொடையுடை யான்குண மேகுண மாகுஞ்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே. 109

உகந்துநின் றேபடைத் தானுல கேழு
முகந்துநின் றேபடைத் தான்பல வூழி
யுகந்துநின் றேபடைத் தானைந்து பூத
முகந்துநின் றேயுயி ருன்படைத் தானே. 110

படைத்துடை யான்பண் டுலகங்க ளேழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் றானே. 111

ஆதி படைத்தன னைம்பெரும் பூதங்க
ளாதி படைத்தன னைப்பல் லூழிக
ளாதி படைத்தன னெண்ணிலி தேவரை
யாதி படைத்தவை தாங்கிநின் றானே. 112

அகன்று னகலிட மேழுமொன் றாகி
யிவன்று னெனநின் றெளியனு மல்லன்
சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்று னுலகுறு நம்பனு மாமே. 113

உண்ணின்ற சோதி யுறநின்ற வோருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருண்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி மாபோ தகமே. 114

ஆருமறி யாதவ் வண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்
சோராமற் காணுஞ் சுகமறிந் தேனே. 115



## கெற்பைக் கிரியை

ஆக்குகின் றுன்முன் பிரிந்தவிரு பத்தஞ்
சாக்குகின் றனவ ஞதியெம் மாருயி
ராக்குகின் றுன்கெற்பக் கோளகை யுள்ளிருந் 116
தாக்குகின் றுனவ னுவ தறிந்தே.

அறிகின்ற மூலத்தின் மேலங்கி யப்புச்
செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற வின்னுயிர்ப் போந்துறை நாடப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. 117

இன்புறு காலத் திருவர்முன் பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையு 118
மன்புறு காலத் தமைத்தொழிந் தானே.

கருவை யொழிந்தவர் கண்டநூல் மூவேழ்
புருட னுடலில் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்த 119
துருவ மிரண்டாக வோடிவி ழுந்ததே.

விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி
யொழிந்த முதலைந்து மீரைந்தொ டேறிப்
பொழிந்து புனல்பூதம் போற்றுங் கரண
மொழிந்த நுதலுச்சி யுள்ளே யொளித்தே. 120

பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந்
தாவி யுலகிற் றரிப்பித்த வாறுபோன்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவுங்
கூவி யவிழுங் குறிக்கொண்ட போதே. 121

போகின்ற வெட்டும் புகுகின்ற பத்தெட்டு
மூழ்கின்ற முத்தனு மொன்பது வாய்தலு
நாகமு மெட்டுட ஞலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. 122

ஏற வெதிர்க்கி லிறையவன் றுனுகு
மாற வெதிர்க்கி லரியவன் றுனுகு
நேரொக்க வைக்கி னிகர்போதந் தானுகும்
பேரொத்த மைந்தனும் பேரர சாளுமே. 123

ஏயங் கலந்த விருவர்தஞ் சாயத்துப்
பாயுங் கருவு முருவா மெனப்பல
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனேலய மானதே. 124

கெற்பத்துக் கேவல மாயாள் கிளேகூட்ட
நிற்குந் துரியம்பே தித்து நினைவெழ
வற்புறு காமிய மெட்டாதல் மாயேயஞ்
சொற்புறு தூய்மறை வாக்கினுஞ் சொல்லே. 125

என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்
செம்பா லிறைச்சித் திருந்த மனைசெய்து
வின்பா லுயிர்நிலை செய்தவிறை யோங்கு
நண்பா லொருவனை நாடுகின் றேனே. 126

பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோ
னிதஞ்செய்யு மொத்துட லெங்கும் புகுந்து
குதஞ்செய்யு மங்கியின் கோபந் தணிப்பன்
விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே. 127

ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே
வழிபல நீராட்டி வைத்தழு வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே. 128

சுக்கில நாடியிற் றோன்றிய வெள்ளியு
மக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடு மெண்விரற் புறப்பட்டு நால்விர
லக்கர மெட்டுமெண் சாணது வாகுமே. 129

போகத்து ளாங்கே புகுந்த புனிதனுங்
கோசத்து ளாகங் கொணர்ந்த கொடைத்தொழி
லோகத்து ளாங்கே இரண்டெட்டு மூன்றைந்து
மோகத்து ளாங்கொரு மூட்டைசெய் தானே. 130

பிண்டத்தி லுள்ளுறு பேதைப் புலனைந்தும்
பிண்டத்தி னூடே பிறந்து மரித்தது
வண்டத்தி னுள்ளுறு சீவனு மவ்வகை
யண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. 131

இலைப்பொறி யேற்றி யெனதுட லீசன்
றுலைப்பொறி யிற்கரு வைந்துட னூட்டி
நிலைப்பொறி முப்பது நீர்மை கொளுவி
யுலைப்பொறி யொன்பதி லொன்றுசெய் தானே.

இன்புற் றிருந்த வரிசைவித் துவைத்தமண்
டுன்பக் கலச மணைவா னொருவனே
யொன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே. 133

அறியீ ருடம்பினி லாகிய வாறும்
பிறியீ ரதனிற் பெருகுங் குணங்கள்
செறியீ ரவற்றினுட் சித்திக ளெட்ட
தறிவீ ரைந்தினுள் ளானது பிண்டமே. 134



உடல்வைத்த வாறு முயிர்வைத்த வாறு
மடைவைத்த வொன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியு ளங்கி
கடைவைத்த வீசனைக் கைகலந் தேனே. 135

கேட்டுநின் றேனெங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றூன்முதல் யோனி மயமவன்
கூட்டுகின் றூன்குழம் பின்கரு வையுரு
நீட்டிநின் றூகத்து நேர்பட்ட வாறே. 136

பூவுடன் மொட்டுப் பொருந்த வலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடு
நீரிடை 'நின்ற குமிழி நிழலதாய்
பாருட லெங்கும் பரந்தெட்டும் பற்றுமே. 137

எட்டி னுளைந்தாகு மிந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாய்விடு
மொட்டிய பாச வுணர்வென்னுங் காயப்பை
கட்டி யவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. 138

கண்ணுத லாமங் கலந்துடம் பாயிடப்
பண்ணுதல் செய்து பசுபாச நீக்கிட
வெண்ணிய வேத மிசைத்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே. 139

அருளல்ல தில்லை யரனவ னன்றி
யருளில்லை யாதலி னூலோ ருயிர்க்குத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. 140

வகுத்த பிறவியின் மாதுநல் லாளுந்
தொகுத்திருள் நீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்வகை யெங்கும்
வகுத்துள்ளு நின்றதோர் மாண்பது வாமே. 141

மாண்பது வாக வளர்கின்ற வன்னியைக்
காண்பது வாண்பெண் ணலியெனுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
யாம்பதி செய்தானச் சோதிதன் னாண்மையே.

ஆண்மிகி லாணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தி லலியாகுந்
தாண்மிகு மாகிற் றரணி முழுதாளும்
யாண்வச மிக்கிடில் பாய்ந்தது மில்லையே. 143

பாய்ந்தபின் னஞ்சோடி லாயுளு நூறாகும்
பாய்ந்தபின் னாலோடில் பாரினி லெண்பதாம்
பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந் தவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாச்சலு மாமே. 144

பாய்கின்ற வாயுக் குறையிற் குறளாகும்
பாய்கின்ற வாயு விளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படிற் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லை பார்க்கிலே. 145

மாதா வுதர மலமிகின் மந்தனாம்
மாதா வுதரஞ் சலமிகின் மூகையா
மாதா வுதர மிரண்டொக்கில் கண்ணில்லை
மாதா வுதரத்தில் வந்த குழவிக்கே. 146

குழவியு மாணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணா மிடத்தது வாகில்
குழவியு மிரண்டா மபான னெதிர்க்கில்
குழவி யலியாகுங் கொண்டகா லொக்கிலே. 147

கொண்டநல் வாயு விருவர்க்கு மொத்தெழில்
கொண்ட குழவியுங் கோமள மாயிடுங்
கொண்டநல் வாயுவி ருவர்க்குங் குழறிடில்
கொண்டது மில்லையாங் கோல்வளை யார்க்கே.



கோல்வளை யுந்தியிற் கொண்ட குழவியுந்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. 149

உருவம் வளர்ந்திடு மொண்டிங்கள் பத்திற்
பருவம தாகவே பாரினில் வந்து
மருவி வளர்ந்திடு மாயையி னாலே
யருவம தாவதிங் காரறி வாரே. 150

இட்டா ரறிந்தில ரேற்றவர் கண்டிலர்
தட்டா னறிந்து மொருவர்க்கு முரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனு மங்குளன்
கெட்டேனெம் மாயையின் கீழ்மையெவ் வாறே.

இன்புறு நாடி யிருவருஞ் சந்தித்துத்
துன்புறு பாசத்திற் றோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் றோற்றிய
தொன்புற நாடிநின் றோதலு மாமே. 152

குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைதன் கூட்டிட்டா
லயிர்ப்பின்றி காக்கை வளர்க்கின் றதுபோ
லியக்கில்லை போக்கில்லை யேனென்ப தில்லை
மயக்கத்தா லாக்கை வளர்க்கின்ற வாறே. 153

முதற்கிழங் காய முளையாய் முளைப்பி
னதற்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கு
மதற்கது வாமின்ப மாவது போல
வதற்கது வாய்நிற்கு மாதிப் பிரானே. 154

ஏனோர் பெருமைய னாகினு மெம்மிறை
யூனே சிறுமையு ளுட்கலந் தாங்குளன்
வானோ ரறியு மளவல்ல மாதேவன்
றானே யறியுந் தவத்தினி னுள்ளே. 155

பரத்திற் பதிந்து பதிந்தநற் காய
முருத்தரித் திவ்வுட லோங்கிட வேண்டிற்
றிரைக்கட லுப்புத் திரண்டது போலத்
திரித்தும் பிறக்குந் திருவரு ளாலே. 156

## மூவகை யாருயிர் வர்க்கம்

சத்திசிவன் விளையாட் டாலுயி ராக்கி
யொத்த விருமாயா கூட்டத் திடையூட்டிச்
சத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. 157

விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தாங்குசக லத்தி
னஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதிகள் வேற்றுமை தானே. 158

விஞ்ஞானர் கேவலத் தாராது விட்டவ
ரஞ்ஞான ரட்டவித் தேசுரஞ் சார்ந்துளோ
ரெஞ்ஞான மேழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞான ராணவம் விட்டுநின் றாரே. 159

இரண்டாவ தில்முத்தி யெய்து வரத்தனை
யிரண்டாவ துள்ளே யிருமல பெத்தர்
திரண்டாகு நூற்றெட்டு ருத்திர ரென்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. 160

பெத்தத்தர் சித்தொடு பேண்முத்திச் சித்தது
வொத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய்
மத்தத்து மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே. 161

சிவமாதி யைவகைத் திண்மலஞ் செற்றோ
ரவமாகாச் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்
பவமான தீர்வோர் பசுபாச மற்றோர்
நவமான தத்துவ நாடிக்கொண் டாரே. 162



விஞ்ஞான ராணவங் கேவல மேவுவோர்
விஞ்ஞானர் மாயையிற் றங்கு மிருமல
ரஞ்ஞான ரச்சக லத்தர் சகலராம்
விஞ்ஞான ராதிக ளொன்பான்வே றுயிர்களே.

விஞ்ஞான கன்மத்தர் மெய்யகங் கூடிய
வஞ்ஞான கன்மத்தி னூற்சுவர் யோனிபுக்
கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெய்ஞ்ஞான ராகிச் சிவமேவ லுண்மையே. 164

ஆணவந் துற்றவ வித்தா நனவற்றார்
காணிய விந்துவா நாதசக லாதி
யாணவ மாதி யடைந்தோ ரவரன்றே
சேணுயர் சத்திசிவ தத்துவ மாமே. 165

## பாத்திரம்

திலமத் தனைசிவ ஞானிக் கீந்தால்
பலமுத் திசித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைபொன் னின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. 166

கண்டிருந் தாருயி ருண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தாருயிர்க் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனை
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. 167

கைவிட் டிலேன்கரு வாகிய காலத்து
மெய்விட் டிலேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிலாத விடிஞ்சிலு மாமே. 168

ஆவன வாவ வழிவ வழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்திக் காட்டித்துக் கண்டவ
னேவன செய்யு மிளங்கிளை யோனே. 169

## அபாத்திரம்

கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவதே ரொக்குஞ்
சீலமு நோன்பு மிலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது வாகுமே. 170

ஈவது யோக மியமநிய மங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
யாவ லறிந்தன்பு தங்காத வர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொள் ளீரே. 171

ஆமா றறியா ரதிபஞ்ச பாதகத்
தோமாறு மீசற்குந் தூயகு ரவற்குங்
காமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்
போமா நரகிற் புகான்போதங் கற்கவே. 172

மண்மலை யத்தனை மாதன மீயினு
மண்ண லிவனென் றஞ்சலி யத்தனு
யெண்ணி யிறைஞ்சாதார்க் கீந்த விருவரு
நண்ணுவ ரேழா நரகக் குழியிலே. 173

## தீர்த்தம்

உள்ளத்தி னுள்ளே யுளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரேற்
கள்ள மனமுடைக் கல்வியில் லோரே. 174

தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங்
குளியறி வாளர்க்குக் கூடவு மொண்ணுன்
வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்குந்
தெளிவறி வாளர்தஞ் சிந்தையுள் ளானே. 175

உள்ளத்தி னுள்ளே யுணரு மொருவனைக்
கள்ளத்தி னாலுங் கலந்தறி வாரில்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பத்தலுள் ளாமே. 176



அறிவா ரமர்க ளாதிப் பிரானைச்
செறிவா னுறைபதஞ் சென்றுவ லங்கொண்
மறிவார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார்பு னன்மூழ்கப் புண்ணிய ராமே. 177

கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்ட
லுடலுறத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை யொன்றறி யாரே. 178

கலந்தது நீர துடம்பிற் கறுக்குங்
கலந்தது நீர துடம்பிற் சிவக்குங்
கலந்தது நீர துடம்பில் வெளுக்குங்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. 179

## திருக்கோயிலிழிவு

தாவர லிங்கம் பறித்தொன்றிற் றுபித்தா
லாவதன் முன்னே யரசு நிலைகெடுஞ்
சாவதன் முன்னே பெருநோ யடுத்திடுங்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. 180

கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்மபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டிவித் தேவிடும் விண்ணவ னாணையே. 181

ஆற்றரு நோய்மிக் கவனிமழை யின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் றானே. 182

முன்னவனார் கோயில் பூசைகண் மூட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளங் குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
யென்னரு நந்தி யெடுத்துரைத் தானே. 183

பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை யர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. 184

## அதோமுகதெரிசனம்

எம்பெரு மானிறை வாமுறை யோவென்று
வம்பவிழ் வானோ ரசுரன் வலிசொல்ல
வம்பவள மேனி யறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் றானே. 185

அண்டமொ டெண்டிசை தாங்கும தோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
யுண்டது நஞ்சென் றுரைப்ப ருணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே. 186

செய்தா னறிவன் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகலு மனிதர்காள்
மெய்யே யுரைக்கில்விண் ணோர்தொழச் செய்வன்
மைதாழ்ந் திலங்கு மணிமிடற் றோனே. 187

நந்தி யெழுந்து நடுவுற வோங்கிய
செந்தீ கலந்துட் சிவனென நிற்கு
முந்திக் கலந்தங் குலகம் வலம்வரு
மந்தி யிறைவ னதோமுக மாமே. 188

அதோமுகங் கீழண்ட மான புராண
னதோமுகந் தன்னொடு மெங்கு முயலுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானு
மதோமுக னூழித் தலைவனு மாமே. 189

அதோமுக மாமல ராயது கேண்மின்
மதோமுகத் தாலொரு நூறாய் விரிந்து
வதோமுக மாகிய வந்தமில் சத்தி
யுதோமுக மாகி யமர்ந்திருந் தானே. 190



## சிவநிந்தை

தெளிவுறு ஞானத்துச் சிந்தையி னுள்ளே
பளிவுறு வாரம ராபதி நாடி
யெளியனென் றீசனை நீச ரிகழில்
கிளியொன்று பூனையாற் கீழது வாகுமே. 191

முளிந்தவர் வானவர் தானவ ரெல்லாம்
விளிந்தவர் மெய்நின்ற ஞான முணரா
ரளிந்தமு தூறிய வாதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கவொண் ணாதே. 192

அப்பகை யாலே யசுரருந் தேவரு
நற்பதை செய்து நடுவே முடிந்தனர்
எப்பகை யாகிலு மெய்தா ரிறைவனைப்
பொய்ப்பகை செய்யினு மொன்றுபத் தாமே.

போகமு மாதர் புலவி யதுநினைந்
தாகமு முட்கலந் தங்குள ராதலில்
வேதிய ராயும் விகிர்தனு மென்கின்ற
நீதியு ளீச னினைப்பொழி வாரே. 194

## குருநிந்தை

பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்க
ளுற்றிருந் தாரை யுலைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி யுற்றிருந் தாரவா
பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. 195

ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செய்வோர்
ரூரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே. 196

பத்தினி பக்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவ
ரத்தமு மாவியு மாண்டொன்றின் மாய்ந்திடுஞ்
சத்திய மீது சதாநந்தி தாளே. 197

மந்திர மோரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையி னொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. 198

ஈச னடியா ரிதயங் கலங்கிடத்
தேசமு நாடுஞ் சிறப்பு மழிந்திடும்
வாசவன் பீடமு மாமன்னர் பீடமு
நாசம தாகுமே நம்நந்தி யாணையே. 199

சன்மார்க்கச் சற்குரு சந்நிதி போய்வரி
னன்மார்க்க முங்குன்று ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையு மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. 200

கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
வெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றுங்
கைப்பட்ட நெய்பா றயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றுங் கன்மீஞா னிக்கொப்பே.

## மயேசுர நிந்தை

ஆண்டா னடியவ ராக்கும் விரோதிக
ளாண்டா னடியவ ரையமேற் றுண்பவ
ராண்டா னடியாரை வேண்டாது பேசினார்
தாந்தாம் விழுவது தாழ்வா நரகமே. 202

ஞானியை நிந்திப் பவனுநல னொன்றே
ஞானியை வந்திப் பவனுமெய் நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே. 203

## பொறையுடைமை

பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதா னொன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையு நாவையு
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே. 204



ஓலக்கஞ் சூழ்ந்த வுலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனியன் பாதம் பணிந்துய்ய
மாலுக்கு மாதி பிரமற்கு மன்னவன்
ஞானத் திவர்மிக நல்லரென் றானே. 205

ஞானம் விளைந்தவர் நம்மிட மன்னவர்
சேனை வளைந்துந் திசைதொறுங் கைதொழ
வூனை விளைந்திடு மும்பர்தம் மாதியை
யேனை விளைந்தரு ளெட்டலு மாமே. 206

வல்வகை யாலு மனையிலு மன்றிலும்
பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செயுங்
கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்தனுக்
கெல்லையி லாத விலயமுண் டாமே. 207

## பெரியோரைத் துணைக்கோடல்

ஓடவல் லார்தம ரோடுந டாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
தேடவல் லார்க்கருள் தேவர் பிரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே. 208

தாமிடர் பட்டுத் தளிர்போற் றயங்கினு
மாமனத் தங்கன்பு வைத்த திலையாகு
நீயிடர் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. 209

அறிவா ரமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிவதத்து வத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே. 210

தார்சடை யான்றன் றமரா யுலகினிற்
போர்புக ழாவெந்தை பொன்னடி சேருவர்
வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங்
கோவடைந் தந்நெறி கூடலு மாமே. 211

உடையா னடியா ரடியா ருடன்போய்ப்
படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
வுடையான் வருகென வோலமென் றூரே. 212

அருமைவல் லான்கலை ஞாலத்துட் டோன்றும்
பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்து
முரிமைவல் லானுணர்ந் தூழி யிருக்குந்
திருமைவல் லாரொடுஞ் சேர்ந்தன்னி யானே.

## அட்டாங்க யோகப்பேறு

### இயமம்

போதுகந் தேறும் புரிசடை யானடி
யாதுகந் தாரம ராபதிக் கேசெல்வ
ரேதுகந் தானிவ னென்றருள் செய்திடு
மாதுகந் தாடிடு மால்விடை யோனே. 214

### நியமம்

பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்
கற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு
முற்றெழுந் தாங்கே முனிவ ரெதிர்வரத்
தெற்றுஞ் சிவபதஞ் சேர்த்தலு மாமே. 215

### ஆதனம்

வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த்
திருந்தம ராபதிச் செல்வ னிவனெனத்
தருந்தண் முழவங் குழலு மியம்ப
விருந்தின்ப மெய்துவ ரீச னருளே. 216

### பிராணயாமம்

செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்து
கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள
வெம்பொற் றலைவ னிவனு மெனச்சொல்ல
வின்பக் கலவியி ருக்கலு மாமே. 217



### பிரத்தியாகாரம்

சேருறு காலந் திசைநின்ற தேவர்க
ளாரிவ னென்ன வரனு மவனென்ன
வேருறு தேவர்க ளெல்லா மெதிர்கொள்ளக்
காருறு கண்டனை மெய்கண்ட வாறே. 218

### தாரணை

நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ்
சொல்வழி யாளர் சுருங்காப் பெருங்கொடை
யில்வழி யாள ரிமையவ ரெண்டிசைப்
பல்வழி யெய்தினும் பார்வழி யாகுமே. 219

### தியானம்

தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும்
வாங்கவல் லார்க்கும் வலிசெய்து நின்றிட்டுத்
தேங்கவல் லார்க்குந் திளைக்கு மமுதமுந்
தாங்கவல் லார்கட்குந் தன்னிட மாமே. 220

### சமாதி

காரிய மான வுபாதியைத் தான்கடந்
தாரிய காரண மேழுந்தன் பாலுற
வாரிய காரண மாயத் தவத்திடைத்
தாரியல் தற்பரஞ் சேர்தல்ச மாதியே. 221

### வேறு

ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொழி
ஆயு முபாதியை மாயா வுபாதியால்
ஏய பரிய புரியுந் தனதெய்யுஞ்
சாயுந் தனது வியாபகந் தானே. 222

ஆசுச மாசுச மென்ப ரறிவிலார்
ஆசுச மாமிட மாரு மறிகிலார்
ஆசுச மாமிட மாரு மறிந்தபின்
ஆசௌச மாக அசுபதி யமர்ந்ததே. 223

## வாழ்த்து

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
யீச னெந்தை யிணையடி நீழலே. 224

## ரேப்தி செந்தமிட்டொகுதி

பஞ்சு — கோசமுடைத்து
உப்பு — பீசமுடைத்து

அரசுட னுலத்தி யாகுமக் காரம்
விரவு கனலில் வியனுரு மாறி
நிரவய னின்மலன் றாள்பெற்ற நீத
குருவம் பிரம முயர்குல மாமே. 225

ஓதிய பொருளும் வல்லன் உயர்குலத் துற்றோ னுகும்
சாதியு நெறியு முள்ளோன் தத்துவ முணர வல்லன்
காதலார் குழலி னுர்க்குக் கனத்தொடு முயல வல்லன்
நீதொரு நாளுஞ் செய்யான் திருவோண நாளி னுனே.

உ

## சரஸ்வதி துதி

புத்தகத் துள்ளுறை மாதே பூவி லமர்ந்துறை வாழ்வே
வித்தகப் பெண்பிள்ளை நங்காய் வேதப் பொருளுக் கிறைவி
முத்தின் குடையுடை யாளே மூவுல குந்தொழு தேவி
செப்புக வித்தன் முலையாய் செவ்வரி யோடிய கண்ணுய்
முத்து நிறைந்தவெண் பல்லாய் முருக்கம்பூ மேனிநிறத் தாளே
தக்கோலந் தின்ற துவர்வாயே சரஸ்வதி என்னுந் திருவே
எக்காலும் உன்னைத் தொழுதோம் எழுத்தறி புத்திபண்ணி வைப்பாய்
ஆக்கா யெம்பெரு மாட்டி அழகிய பூவணை மீதே

---

ஆவின மழைபொழிய இல்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோவ அடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண் டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவன் எதிரே செல்லத்
தள்ளவொண்ணு விருந்துவரச் சர்ப்பந் தீண்டக்
கோவேந்தர் உழுதுண்ட கடமை கேட்கக்
குருக்கள்வந்து தட்சணைகள் கொடுஎன் றுரே.

உ

பிதிர்பதி பெருமாள் காப்பாற்றுவாராக





வணக்கம்

சுபம்

1930ஆம் ஆண்டு சுவேதாரணியேஸ்வரனுக்கு தெய்வநாயகி திருமணக் கோலமும் வள்ளிநாயகி திருமணக் காட்சியும் ஆகிய மணவாளக் கோலம் மு. குமாரசுவாமிக் குருக்கள் காலத்தில் நடைபெற்ற திருவிழாவில் கு. நாகம்மா மங்கள தீபாராதனை நிறைவேற்றியபோது பாடிய செய்யுள்.

வரத்தலையில் வாழ் வரதராம்
இரந்துண்ணி தன்னுடலிற் பாதி
வரைமகளுக் களித்த வரதர் வாதர்.

சுபம்.

உ

1968ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் (பிலவங்க வருஷம்) முத்துக்குமாரசுவாமி — தெய்வநாயகி திருமணக் கோலமும், வள்ளிநாயகி திருமணக் காட்சி ஆகிய மணவாளக்கோலமும் நடைபெற்ற பொழுது கு. அப்பாக்குருக்கள் காலத்தில் அ. சீதா லெக்ஷ்மியும் அவரின் சகோதரியின் புத்திரி ம. மல்லிகாராணியும் மங்கள தீபாராதனை நிறை வேற்றிய பொழுது பாடிய செய்யுள்.

பூமதி சேதனம் ஆமமென் வரத்தலை
பொற்பாரும் பதிவாழும் கற்பகமே துணை
நாமது சேதனம் பூவாழ்க மும்மாரி
நன்மதி பொழிந்தாண்டு நல்வினை வாகவே
மந்திரம் வேதங்கள் அந்தண ராவினம்
மன்னர் முறைகற்பு கன்னியர் வாழ்கவே
செந்தமி ழாறங்கம் தந்திரங் கலைவாழ்க
சிவசமய நெறி தவநிலை வாழ்கவே.

சுபம்.

Prisons Office,
Colombo, 17th March 1919.

## PERMIT

Permission is hereby granted to Brama Siri Muttu Rishi to visit any prison in the Island on Sundays and Hindu New Year Day in terms of Rule 240 of the Manual of Rules.

Sgd. *Major A. de Milton*
*Inspector General of Prisons*

1. **S. S.** நடராஜ குஞ்சித தீக்ஷிதர்,
**S/o. N.** ஸச்சிதானந்தகணேச தீக்ஷிதர்,
*13, கீழ வீதி,*
*சிதம்பரம் ( இந்தியா )*

2. **Sri S. M. Rajaram,**
**C/o Avra,**
19, Sea Street,
COLOMBO - II

3. **K. N. Subramaniam,**
South Fourth Street,
Kallal, Ramanad Dist.,
SOUTH INDIA.

---

1. *திருஷி ஈஸ்வரம் கோயில்,*
**P.** நாகலிங்கம், *1944ஆம் ஆண்டு எழுதிய*
*உறுதி இல. 1070.*

2. *வயல்வழித்தரைப் பிள்ளையார் கோயில்,*
**M.** சிதம்பரநாதன், *1944ஆம் ஆண்டு எழுதிய*
*உறுதி இல. 590.*

உ
சிவமயம்



தேவர்களால் பூசிக்கப்பட்ட மகா சிவலிங்கம்.

# திருஷீச்சர திருப்பணி

குகநேயச் செல்வர்களே !

ஷை ஆலயத்திலே தம்ப மண்டபம், வஸந்த மண்டபம், யாகசாலை என்பவற்றைப் புனருத்தாரணஞ் செய்ய உத்தேசித்துள்ளோம். அவற்றைப் பூர்த்தியாக்கப் பெருந் தொகைப் பணம் வேண்டும். ஷை திருப் பணிக்குத் தங்களால் இயன்ற பொருளுதவி புரிந்து பாலசுப்பிரமணியப் பெருமானின் திருவருளைப் பெற்றுய்யுமாறு வேண்டுகிறோம்.

சுபம்

பன்னாலை,
தெல்லிப்பழை.

இங்ஙனம்
கு. முத்துச்சாமிக் குருக்கள்

---

பெரி. சுப. கண. நாச்சியப்பசெட்டியார்
(நீர்கொழும்புக் கடைக்காரர்)
A. V. R. A. Shop,
19, செட்டியார் தெரு,
கொழும்பு - 11.

இவர்களுடைய பெருந்தொகையான பணம் மகான் மு. திருஷி அவர்களுக்குக் கொடுத்து உபயமாகத் திருப்பணி வேலைகள் நடைபெற்றன.

